மேகத் திரள்கால் விழுந்து பொழியமண்ணும்
மாகமுமொன் றாக வளர்வெள்ளம் - மோகமலர் கஅ௩

மானைப் புணரும் வருணகுலா தித்தனைமகிழ்
சேனைப் பெருக்கம் எனத்திகழ்ந்து - கானில்

விசைகொண்டு காலெடுத்து வீசிநடந் தோடித்
திசைகொண்டு காம்பீரம் செய்து - மிசைஉந்தித் கஅ௫

தண்குறிஞ்சி வந்தடைந்து சம்பகம்பி டுங்கிவண்டு
பண்குறிஞ்சி நந்துகொந்து பந்தமுறந்து - திண்குறிஞ்சிச்

சந்தனங்க ளைந்துமுந்தித் தந்திசிங்கம் எண்கினங்கள்
உந்தியொன் றொடொன் றெதிர்ந்து டைந்தமிழ்ந்த -
வந்திரைந்து

விண்டுமண்டு விண்டடர்ந்து விண்டொடர்ந்து
குன்றடைந்து
கொண்டுநின்ற குங்குமங்கொணர்ந்தெழுந்து-மிண்டுகின்ற

தந்ததொந்த மென்றுசந்த தங்கழங்கு கொண்டமைந்த
அந்தவண்டல் எங்குமொண்ட டர்ந்துசென்று - முந்தி

---

கஅ௩. திரள் கால் : திரண்ட காற்று. மாகம் : விண்ணுலகம்.

கஅ௪. மலர்மானை : திருமகளை. கலைமகளையும் கொள்ளலாம். கான் : காடு.

கஅ௫. திசைகொண்டு : திக்கெல்லாம்பரந்து.

கஅ௬. தண் குறிஞ்சி : குளிர் வரைநிலம். பண் குறிஞ்சி : குறிஞ்சி ராகம்.

கஅ௭. சந்தனங் களைந்து : சந்தன மரங்களைப் பிடுங்கி. முந்தி : விரைந்து. தந்தி : யானை. சிங்கம் : சிம்மம். எண்கு : கரடி. உந்தி : செலுத்தி.

கஅ௮. விண்டு : மலை. விண்டு : பிளந்து. மிண்டுதல் : நெருங்குதல்.

கஅ௯. தந்த தொந்தம் : ஒலிக்குறிப்பு.

விளைந்த கருந்தினை செந்தினை விரசி
வளைந்த புனங்களை மண்டி - அளைந்து ௧௧௦
வருந்த மனங்குற மங்கையர் ஒன்றி
இருந்த பரண்கள் எறிந்து - நிரம்பிய
குங்கிலிய மும்திமிசும் கொண்டோங்கிக் கேகயமும்
பைங்கிளியும் ஓட்டப் பறந்தோடித் - துங்கப் புறத்து
தாங்கும் மயில்படைத்த தாடாளனைக் கரத்தில்
ஓங்கும் அயில்படைத்த உத்தமனைப் - பூங்கடப்ப
மாலையனை வண்டார் மரைமாட பீடத்தின்
மேலயனைக் காவல் விளைத்தானைக் - கோலமதி
ஆறுமுகத் தானை அசுரர் குலமழியத்
தாறுமுகத் தானைத் தொலைத்தானை - வீறுமலர் ௧௧௫
வேரிப் பதாம்புயனை மென்குறத்தி கொங்கைபட்ட
பூரிப்ப தாம்புயனைப் புண்ணியனைச் - சீருற்ற
கந்தனைச் சேயைக் கடவுளைச் செவ்வேளை அரனார்
மைந்தனைக் கண்டு மனமகிழ்ந்து - முந்தி எதிர் ௧௧௭

---

௧௧௨. குங்கிலியம் : குங்கிலிய மரம். திமிசு : வேங்கை மரம். கேகயம் : மயில்.

௧௧௩. தாடாளன் : பெருமையிற் சிறந்தோன். கரம் : கை. அயில் : வேல். கடப்பம் : கடம்பு.

௧௧௪. காவல் விளைத்தான் : சிறை வைத்த முருகன்.

௧௧௫. தாறு : கூட்டம். தானை : படை. வீறு : சிறப்பு.

௧௧௬. வேரி : தேன். பதாம்புயம் : பாத தாமரை. மென் குறத்தி : வள்ளி. பூரிப்பதாம்புயனை : பூரிக்கின்ற தோளை உடையவனை.

௧௧௭. சேய் : முருகன் பெயர்களுள் ஒன்று; கடவுளின் சேய் ஆதலினால்.

௧௧௩ முதல் இதுவரை குறிஞ்சி நிலக் கடவுளாகிய வேலனைப் பற்றி.

பாலைவனம மேவியதி பாதகவில் வேடர்அணி
வேலைவடி வாளை அலை மேலுதறி - ஓலமிடு கசுஅ

கூபமஉறை நீரினொடு கூடிவிளை யாடிஅதி
தாபவனம மேவிஅழல் சாடிநிறை - மாபுறவின

கூடுகளைக் காரகிலைக கோலமுரு டாளகளளிக
காடுகளைச சாயத்திருபபைக கானநணுகி-நீடுவிறல் உOO

பாராள ரைபபோல் பகறசூரை ஆடுவார்
போராடல் எல்லாம புறஙகணடு - ராகி

அந்தரி பிஙகலை அமபிகை சஙகரி
சுநதரி விநதை சுமஙகலை - மநதர

பார பயோதரி பூதரி
காரணி வாமினி காமினி - தீரி

அமலை நிமலை அரிவை தெரிவை
கமல சரணி கவுரி - குமரி

வராகி கபாலி மனோனமணி சூலி
புராணி சடாதரி பூவை - தராதலந்தோர் உOரு

---

கசுஅ. ஓலம : சத்தம.

கசுசு. கூபம : கிணறு. அழல் சாடி : பாலை நில நெருபபொடு போர் செயது. புறவு : புரு.

உOO. முருடு : மரக கணு. இருபபைககான : இலுபபைமரக காடு.

உOக. பாராளரைபபோல் பகறசூரை ஆடுவார்: பாரை ஆளுகினறவர்களைப போலப பகல் கொளளை இடுவார். பாரை ஆளும வேந்தர் வலி கொணடு குடிகளிடம கவாவது பகற கொளளை எனபது கருத்து. பகற சூரையாடுவார் பாலை வனத்திலே திரியும திருடர்கள.

உOஉ முதல் உOரு வரை அமபிகையின பெயர்கள. அவைகள பாலை நிலப பாவைக்குக கூறப படுகினறன.

பன்னி அடிவணங்கும் பாலைக் கிழத்தியெனும்
கன்னி தழுவக் களிகூர்ந்து - நன்னிலமென் ௨0௬

முல்லை புகுந்து முருகு பெருகுநெடுங்
குல்லை அணிந்து குழல்ஏந்தி - எல்லையில்தன்

மன்றல் அளகத்துக்கும் வாள்நகைக்கும் ஒப்பென்று
கொன்றையும் முல்லையும் கோதெறிந்து - வென்றி

திருப்புருஷன் நாகையர்கோன் செங்கைக் கொடைபோல்
சுரபிதனை அஞ்ஞாத துறந்து - குரவையிலே

மண்டு பொதுவியர்தம் மாமே கலைவாரிக்
கொண்டுநெடு மால்போல் குருந்தேறித்-
தண்டலையில் ௨௧0

காயா மலர்நிறக் காரணமென்ன என்றுவிழ
சாயா முறியாத் தமரித்து - தூயமலர்

வெண்படாத் தைக்களைந்து வேறுபடாம் சாத்துவர்போல்
தண்படா வெண்படாம் சாத்திப்போய்-வண்பரனூர் ௨௧௨

---

௨0௬. பாலைக் கிழத்தி : பாலைக்கு உரியவள்.

௨0௭. முல்லை : காடு சூழ்ந்த நிலம். முல்லை : துளசி. குழல் : மூங்கில் குழாய்.

௨0௮. மன்றல் : மணம். அளகம் - கூந்தல். நகை : பல்.

௨0௯. சுரபி : காமதேனு. குரவை : இடைப் பெண்கள் ஆடும் கூத்து.

௨௧0. பொதுவியர் : ஆயர்குலப் பெண்கள். மேகலை : ஆடை. குருந்து : குருந்தமரம். தண்டலை : சோலை.

௨௧௧. சாயா : சாய்த்து. முறியா : முறித்து. தமரித்து : சத்தம் போட்டு.

௨௧௨. படாம் : ஆடை.

நேரிழைவந் தாளென்று நெய்பால் தயிரான
வாரிதி கொள்ள வந்தமைந்தன் - பாரினும் ௨௧௩

ஏரான வருணகுலா தித்தன்பால் நாகையிலே
பாரோர் விருந்தருந்தும் பந்தியன்றோ - பேராயர்

பாடிதனில் நெய்ச்சாடி பாற்சாடி மிக்கதயிர்
சாடி நிமிடந் தனிற்சாடி - ஓடிக் ௨௧௫

கடுங்கான் இடைநடந்து கல்லைப்பெண் ஆக்கி
அடுங்கான வெம்பணியில் ஆடி - நெடுங்கோட்டு

மாமருதம் சாய்த்து வணங்குவார் நெஞ்சுறைந்து
தாம மணியும் சகடுதைத்து - பூமிஎனும்

மின்னை அளந்து விளங்கித் தலைநாளில்
தன்னையும் பெற்றிரு தாள்வணங்கி - முன்னி

மருதம் புகுந்து வனசம் புனைந்து
மருதம் களைந்து வளைந்து - கருதரிய ௨௧௯

---

௨௧௫. சாடி : பாத்திரம். நிமிடம் தனிற் சாடி : நிமிஷத்தில் அடித்துக்கொண்டு.

௨௧௬. கடுங்கான் : கடுமையான கானகம். கல்லைப் பெண்ணாக்கியது : அகலிகை கதை. பணி : பாம்பு. பணியில் ஆடியது : காளிங்கன் என்னும் பாம்பின் மேல் ஆடியது. நெடுங்கோடு : நீண்ட கிளை.

௨௧௭. மாமருதம் : பெரிய மருதமரம், தாமம் : மாலை. சகடு : வண்டி வடிவமாக வந்த அசுரன்.

௨௧௮. மின்னை அளந்து: மாவலிபால் உலகு அளந்த வரலாறு. ௨௦௭. முதல் இதுவரை திருமாலுக்கும் நதிக்கும் சிலேடை.

௨௧௯. மருதம் : நெல் முதலிய உயர் பொருள் விளையும் நன்செய் நிலம். வனசம் : தாமரை. மருதம் களைந்து : மருத நிலப் பொருள்களை வாரி.

எம்பிரான் தேவி எழுந்தருளி னானென்றே
உம்பர்கோன் வைத்த உறுபடைபல - பைம்பூகத் ௨௨0
தாறும் இளநீரும் தண்கரும்பும் மஞ்சளிஞ்சி
தேறும் கருணைச் செழுங்கிழங்கும் - ஊறிரதத்
தேமா நறுங்கனியும் திண்பலா வின்கனியும்
மாமா தனையின் வளர்கனியும் - ஆமலகப்
பைங்கனியும் வாழைப் பசுங்கனியும் பேரெலுமிச்
சங்கனியும் பொன்மரத் தங்கனியும் - துங்கமலர்ச்
சோலைவாய் வண்டுவைத்த சுத்தப் பசுந்தேனும்
ஆலைவாய்க் கன்னல் அடுபாகும் - மாலதியும்
பன்னீரும் மல்லிகையும் பாளையும் பாதிரியும்
மன்னும் குவளை மதுமலரும் - இனைவகை ௨௨௫
எல்லாம் பரவி இருந்த இடந்தோறும்
உல்லாச மாக உலாவிவந்து - மல்லாடத்
தூண்டு பரியேறும் சுத்தவீ ராதிபர்போல்
பூண்டுசிலை வாளெடுத்துப் போதாவி - ரண்டு ௨௨௭

---

௨௨0. எம்பிரான் தேவி : செல்வத் திருமகள். உம்பர் கோன் : தேவராஜன். உறுபடை : பெரியோர்க்குப் படைக்கும் பண்டங்கள். பைம்பூகம் : பசுமையான பாக்கு மரம்.

௨௨க. தாறு : காய் நிறைந்த கொத்து. தேறும் : தேறிய. ஊறு இரதம் : ரசம் ஊறுகின்ற.

௨௨௨. ஆமலகம் : நெல்லி.

௨௨௩. பொன் மரத்தங் கனி : பொன் போன்ற ஒரு மரத்தின் பழம்.

௨௨௪. ஆலை : இயந்திரம். கன்னல் : கரும்பு. அடு பாகு : காய்ச்சிய கட்டி. மாலதி : சிறு செண்பகப் பூ.

௨௨௫. மது மலர் : தேன் சொட்டும் பூ.

௨௨௬. மல்லாட : மற்போர் செய்ய.

௨௨௭. பரி : குதிரை.

கரையெங்கும் மள்ளர் களித்தார்க்க நன்னீர்த்
திரையெங்கும் அன்னம் செறியப் - பரவியே ௨௨அ

நெய்தல் நிலம்புகுந்து நெய்தல் தடம்படிந்து
மைதவழும் புன்னை வனமாயத் தத்துக் - கைதைமடல்
சூடிப் புளினமெல்லாம் சுற்றிப் பெரும்பனையைச்
சாடிப் புள்ளினம் தன்னூடாடி - நீடுற்ற ௨௩௦

மாதரங்க முந்திவலை வாணர் இளம்பருவ
மாதரங்க முந்திவலை வாயுகந்து - தாதவிழ்ந்து
பானலம்பு நைந்துவரி பாய்மரமுஞ் சென்றுவிழ
மீனினங்கள் சிந்தியலை வீசிமொண்டு - கானலெங்கும்
ஓடிக் கழிக்கரையில் ஒல்லைப் பெடைக்குருகை
மூடிச் சுழித்தலையில் மூழ்கப்போய் - நாடிக்கண்டு

---

௨௨அ. மள்ளர் : உழவர். களித்து ஆர்க்க : நீர்ப் பெருக்கைக் கண்டு மகிழ்ந்து ஆரவாரம் செய்ய.

௨௨௯. நெய்தல் நிலம் : கடல் சார்ந்த தரை. தடம் : தடாகம். மை : மேகம். புன்னை வனம்: புன்னை மரக்காடு. கைதை : தாழை.

௨௩௦. புளினம் : சோலை. புள்ளினம் : புள் இனம், பறவைக் கூட்டம்.

௨௩௧. மாதரங்கம் . பெரிய அலை. வலை வாணர் : வலையினாலே வாழ்கின்றவர்; அவர் வலைஞர், அல்லது செம்படவர். மாதர் அங்கம் உந்தி : மங்கையர் உடம்பிலே நீரைச் செலுத்தி. வலைவாய் உகந்து : வலையை நீர் உகச்செய்து.

௨௩௨. பானல் அம்பு நைந்து : நீலோற்பலம் போன்ற கண் அம்பு வருந்தி. வரி பாய்மரம் : கட்டப் பட்ட பாய்மரம். கானல் : கடற்கரைச் சோலை.

௨௩௩. கழிக்கரை : சதுப்பு நில ஓரம். ஒல்லை : விரைந்து. பெடைக் குருகு : பெண் நாரை.

அந்த வருணன அடிவணங்கிக காணிககை
தந்த தாளம தனைப்புனைந்து - செந்தமிழ்க்கு

மாறாத செங்கை வருணகுலா தித்தனென்று
கூறு தவர்போல் குறைவுற்றுப - பேறான உ௩௫

சங்கம திகழ்நாகைத் தாருவைசசே ராதவர்போல்
பங்கம புனைந்து பயனெய்திப - பொங்குதுழாய்த

தேமபதும நாபத திருமால்போல சங்கேந்திப
பாமபணையின மேவிப படியளந்து - மேமபடுசொல

**நாடு**

அரசுதனா சங்கேந்து அமலனா மனமதனை
மெயச்சுதன கபபடைத்த வேந்தனா - நச்சரவில

கண்டுயிலவார மூதண்டம காத்தருளவார தேனசொரியும
வண்துளவா ரங்க மாநகரும - எண்டிசையோர

வந்திககும தென்குடந்தை மாநகரும தேவரெலாம
சிந்திககும மாமககுசோ தீர்த்தமும - முந்தவே உ௪0

---

உ௩௪. தாளம : முத்து.

உ௩௫. ஆறு, கடைசியாகக கடலில விழுந்து குறைந்துவிட்டது. எபபடி? தமிழுக்கு உதவும வளளல வருண குலாதித்தனைப பாடாதவர்போல.

உ௩௬. நாகைத் தாரு : நாகையிலுள்ள கறபகம. அததாருதான வருண குலாதித்தன. பங்கம : கேடு.

உ௩௮. மெயச சுதன : உண்மை மகன. வேந்தன : திருமால. திருமாலுக்கு மனமதன மகன முறை. அரவு : பாமபு.

உ௩௯. மூதண்டம : பழமை வாயந்த உலகம்.

உ௪0. வந்தித்தல : வணங்குதல். குடந்தை : கும்ப கோணம. தீர்த்தம : மகா மகக குளநீர்.

தைபபூசம ஆடத் தகுமெனன வெண்ணீறு
மெய்பபூசச சொனன விடைமருதும - எபபோதும ௨௪௧

ஏத்துகினற சுந்தரனூர் ஏவஇரு ளில்தூதாய
ஆத்திமுடி யோனசெனற ஆரூரும - வாயத்த

திருபபதிகள உளளவெலாம சேவிததுச செங்தேன்
மருபபதியும தண்டலையுள மனனி - விருபபமுடன

வேநதா கிளைதழைகக வேதாக மநதழைகக
ஆயந்த வணிகா அறந்தழைகக - ஏயநத

உழவர் குலந்தழைக்க உணணமுர்தம ஊறும
விழவும திருநாள விழாவும - அழகாம ௨௪௫

மனுநெறியும் செல்வமும வணதமிழபபா ராட்டும
அனுதினமும் தனமா சனமும - தினகரனூர்

திணைக் குலத்துதித்த செமபியாகோ மானபுரக்கும
வண்மையுடைச சோழ வளநாடன - பணமருவும

**நகர்**

பாடலும நாடக சாலையும பைந்தொடியாா
ஆடலும சூழகினற ஆலயமும - நீடு

பணிகோ புரநிரையும பைமபொன மதிலும
மணிக்கோ புரமேடை வைபபும - கணககாயா ௨௪௯

---

௨௪௧. விடைமருது : திருவிடைமருதூா.

௨௪௨. சுந்தரனூா : சுநதர மூாததி சுவாமிகள. ஆத்திமுடியோன : ஆததி மலா சூடிய சிவனூர். ஆரூா : திருவாரூா.

௨௪௩. மருப பதியும : வாசனை படியும. தண்டலை : சோலை.

௨௪௬. தினகரன : சூரியன.

௨௪௭. செமபியர் கோமான் : சோழ மனனன். பண் : இசை.

௨௪௯. நிரை : வரிசை. கணககாயர் : நூல் சொல்லிக் கொடுபபோர்.

கூட்டமும் முத்தமிழின் கோதாட்டும் நல்விருந்தின்
தேட்டமும் பாராட்டும் சீராட்டும் - கோட்டு ௨௫0

வனசத் திரமும் மாமறையோர்க் கெல்லாம்
தினசத் திரமுதவும் சீரும் - அனத்தின்

குலந்தா மரைமேல் குலாவும் வளமும்
நலந்தான் மிருந்த நதியும் - அலர்ந்த

அளகா புரியும் அமரேசன் ஊரும்
பளகாகச் செல்வம் பரித்து - வளமேவும்

செந்நெல்லும் பூகமும் தின்கரும்பும் சந்ததமும்
பன்னுவள நாகைப் பதியினை - ஒன்னலரைச்

**மாலை**

சாடுகின்ற வேல்வீரன் தன்மார்பு அனுதினமும்
சூடுகின்ற வாகைத் தொடையினை - கூடலரைப் ௨௫௫

**பரி**

பேயுங் கழுகும் பெருவிருந்து கொண்டாடப்
பாயும் கவனப் பரியினை - ஆயும் ௨௫௬

---

௨௫0. முத்தமிழ் : இயல், இசை, நாடகம். கோடு : சிகரம்.

௨௫௧. வனசத்திரம் : வனப்பொருட்சாலை. மறை யோர் : மறைபயில் மக்கள்.

௨௫௩. அளகாபுரி : குபேரன் ஊர். அமரேசன் ஊர் : அமராவதி. பளகாக : குறைவு உடையதாக. பரித்து : தாங்கி.

௨௫௪. சந்ததமும் : எப்பொழுதும். பன்னு : நெருங் குகின்ற. நாகைப்பதி : நாகைப்பட்டினம் என்ற ஊர். ஒன்னலர் : எதிரிகள்.

௨௫௫. சாடுதல் : அழித்தல். வாகைத் தொடை : வெற்றி மாலை. கூடலர் : பகைவர்.

௨௫௬. பாயும் : பாய்கின்ற. கவனம் : வேகத்தை யுடைய. பரி : குதிரை. ஆயும் : ஆராயும்.

**யானை**

அருந்தமிழோர் சொற்படியே ஆறுறுப்பும் பாரைப்
பொருந்திமதம் மூன்றும் பொழிந்து - திருந்தார் உ௫௭

படைக்கலந் தூளாக்கிப் பாகரைக்காயந் தேடி
நடக்குமம்மா வேகமெய் நாடி - இடிக்கும்

உருமேறு என்முழங்கி ஒன்பான் முழம்பெற்று
அருமேகம் நிரை அருந்தி - வருமேரு

என்னவிரி வண்டின் இனந்தொடரக் கோபமே
மன்னும் அயிராவதத்தினை - மன்னி உ௬௦

**கொடி**

இலங்குகடற் பாரில் எதிரில்லை 'என்றே
குலவு மகரக் கொடியான - நிலைமைபெறும்

ஈகை வதுவைஜெயம் என்றேதன் முன்றிலிடை
மோகஞ்செய மூன்று முரசினை - நாகமதி

**ஆணை**

சூழுங்கன்ற செய்யசடைச் சோதியார் அம்பலத்துள்
ஆடுகின்ற நாதர்திரு ஆணையான - நீடும் உ௬௩

---

உ௫௭. ஆறு உறுப்பும் பாரைப் பொருந்தி: ஆறு அங்கங்களும் பூமியைத் தொட்டு. திருந்தார் : மாற்றார்.

உ௫௯. உருமு ஏறு : ஆண் இடி. ஒன்பான் முழம் : ஒன்பது முழ உயரம். வரும் மேரு : நடக்கும் மேரு மலை.

உ௬௦. அயிராவதம். இந்திரனது வெள்ளை யானையின் பெயர்.

உ௬௧. மகரக் கொடி : மீன் கொடி.

உ௬௨. ஈகை : கொடை. வதுவை : மணம். ஜெயம் : வெற்றி. இம்மூன்றினையும் முழக்கும் முரசுடையவன். “வண்மை என்றும், தோன்றவரு வெற்றி என்றும் கூடிய கல்யாண மென்றும், மூன்றுய முழங்கும் முரசினை.” என்று சேதுபதி விறலி விடு தூதிற் கூறப்படுவது இதனோடு பொருந்துவது.

உ௬௩. நாதர்திரு ஆணையான் : சிவபெருமான் வழிப் படி ஆணை செலுத்துபவன்.

கடலுக் கரசன் கனங்குழலார் தீட்டும
மடலுக கிசைநத வடிவன - அடலுககுத் உசூச

தோறறியவேல வேந்தா தொலவிருதெ லாமஇமைபபில்
மாறறிய வீரவடி வாளினன - ஏற்றுக உசூரு

கொடியான தனககுக குலககொடியை நலகி
வடியாப புகழுபடைத்த வளளல் - படியாளும

கோமான எனவாழ குருகுலத்தோர் கோததிரததில்
மாமால் அனைய மருதுஙகன - பூமீது

மண்டலிகா கொண்டாடும மானகுல சிலபரன
தண்டமிழவல லோரகிளையைத தாஙகுவோன -
[மணடலத்தில்

தஞசமென வந்தோரைத தபபாமல எபபொழுதும
அஞசலெனக காககும அபயத்தான - கஞசத

திருவளரும மாயபன திருமலை ராய
வருணகுலா திதத மகிபன - சுரபி உஎO

---

உசூச. கனம குழலாா : கனதத கூந்தலையுடைய காரி கையாா. தீட்டும : எழுதும. அடல : பெருமை.

உசூரு. இமைபபில : கண் மூடுவதற்கு முனனே. ஏறு : விடை.

உசூசூ. கொடியான : கொடியையுடையவன, அவன, சிவன. குலககொடி : பாாவதி. மலைமகள பிறநத குலம உடையான வருண குலாதிததன எனபது கருததது. வடியா : வறறாத. படி : பூமி.

உசூஎ. மாமால் : கணணன. மருதுஙகன : மககளில் சிறநதவன்.

உசூஅ. மணடலிகா : அரசா. சில பரன : ஒழுககத் தில மேமபடடவன. கிளை : சுறறம. மண்டலம : உலகம.

உசூகூ. தஞசம : அடைக்கலம. அஞசல்: பயப படாதே. கஞசம : தாமரை.

உஎO. திருவளரும மாயபன : மகா விஷணு. சுரபி : காமதேனு.

அனைய கொடையான் அவதியிடா த்யாக
கனக வனச கரத்தான் - அனவரதம் ௨௭௧
கோனேரி ராஜ வருண குலாதித்தன்
தானு பரண ஜயதுங்கன் - தேனுரும்
தாரான் கிளைதழைக்கத் தந்த திருப்புதல்வன்
வீரா கரனுன் வேற்கரத்தான் - சீரார்
வருணகுலா தித்தனுக்கு மைந்தனென வாழ்வு
தரும்பிரா மன்கனக தாரு - திருமருவும்
வள்ளல் அனையகொடை மங்காமற் காத்தானுக்கு
உள்ள திருத்தமையன் உத்துங்கன் - தெள்ளும் ௨௭௫
இருமரபும் தூயயான் இயல்இசைகள் வல்லான்
ஒருமொழியே சொல்லும் உதாரன் - பொருசமரில்
வாங்கு சிலைவிஜயன் மார்த்தாண்டன் வாளபிமன்
ஓங்கும் அடல்மா ஒளிருதயன் - தீங்குநெறி ௨௭௭

---

௨௭௧. அவதி : எல்லை. கனகம் : பொன். வனச கரத்தான்: தாமரையனைய கையுடையான்.

௨௭௨. தானுபரணன் : தானத்தையே ஆபரணமாகப் பூண்டவன். கோனேரி ராஜ வருண குலாதித்தன், பாட்டுடைத் தலைவனின் தந்தை.

௨௭௪. கனகதாரு : பொன் ஈயக்கும் மரம்.

௨௭௫. காத்தான் என்பவனுக்கு இவன் அண்ணன். உத்துங்கன் : உயர்ச்சியுடையவன்.

௨௭௬. இரு மரபு : தாய் தந்தையரின். இரு வழி. ஒரு மொழி : ஒரே பேச்சு.

௨௭௭. வாங்கு சிலை : வளைந்த வில். விஜயன்: அர்ச்சுனன். மார்த்தாண்டன் : சூரியன். வாள் அபிமன் : வாளில் வல்ல தனஞ்செயன் மகனாகிய அபிமன்யு. அடல்மா : வெற்றிக் குதிரை.

சொல்லாத ஆக்கினைக்குச சுகரீவன மூதண்ட
வில்லாளன வெண்ணீற்று மேனியான - சலலாப ௨௭௮
மாதர்இரு கண்ணும மனமும திறைகொளளும
பூதர வீர புஜத்தின - ஓதும
தரணிபரி பாலன சமரமுக வீரன
கருணை பரிமளிககும கணணன - பரவும ௨௮௦
அடித்தவருக காதரன அனவரத சோமன
கொடுததுவழி காட்டும குரிசில் . தொடுத்துவிடும்
பூந்தா மரைமுதல்ஐம் பூவாளி யுமகருமபும
ஏந்தாத செவவி எழிறகாமன - மாந்தாதா
ஆரும் தரிசித தளவே அவரவாதம
பாரம பரையறியும பண்பாளன - தீரன
அனகன அபயன அமலன அசலன
கனக சரண கமலன - நினைவும ௨௮௪

---

௨௭௮. வெண்ணீறறு மேனியான : திருநீறு பூசிய திருமேனியன.

௨௭௯. திறை : கப்பம. பூதரம : மலை. புஜம : தோள.

௨௮௦. தரணி பரிபாலன : பூமியைக காப்பவன. சமரமுகம : போர்முனை.

௨௮௨. மலரமபும கருமபு வில்லும தாஙகாத அழகிய மனமதன.

௨௮௩. யாரையும கணட மாத்திரத்தில் அவரவர் குணம செயல் ஆதி எல்லாவற்றையும ஊகித்தறியக கூடிய அதி சாமர்த்தியவான.

௨௮௪. அனகன : அழகன. அபயன : அபயங கொடுப்பவன. அமலன : குற்றமற்றவன. அசலன : சலிப்பில்லாதவன். கனக சரண கமலன : பொற்றாமரைத் திருவடியான.

சதுர மொழியும் மரபும் இனிய
மதுர விரக சரசன் - அதுலன் உ௮ரு
இளமை வயதில் இயலும் இசையும்
வளமை புனையும் மகிபன் - அளிகொள்

தருமம் உரிமை தகுதி மிகுதி
அருமை வரிசை அமைவு - பெருமை

உடையன் இனியன் உலகில் எவரும்
அடைய விழையும் அழகன் - மடலிதழ்ந்

தாமஞ் சடிலம் அம்புசாத சரணன்று
காமப் பயலைவென்ற காளகண்டன் - தேமுற்ற

மாலைக் குழலிபங்கன் மானைக் கரத்தணிந்த
கோலப் பரமனன்பு கூடாதுங்கன் - மேலிட்ட உ௯0

கோரக் கடுங்கும்ப கோல தரிகடத்துங்க
வீரச் சமரதந்தி மேலுத்தயன் - நேருற்ற

சற்புருஷ மேருவர சாக்குமண வாளனிறை
அற்புத சொரூபனகி லப்பிரசன் - நற்பதுமை

ஒக்கவிளை யாடுபவன் உத்தமாகி பாசரிதன்
மைக்கொடைக்கு லாவுமொரு வரதரன் - மிக்கதொரு

---

உ௮௪. அளி : கருணை.

உ௮௮. இதழி : கொன்றை.

உ௮௯. தாமம் : மாலை. சடிலம் : சடை. அம்புசாதம்: தாமரை. பயல்: எமப் பயல். காளகண்டன்: நஞ்சைக் கழுத்திலே பெற்ற சிவன்.

உ௯0. குழலி பங்கன் : உமையைப் பாகத்திலே பெற்றவன். மேல் இட்ட : உரித்துப் போர்த்திய.

உ௯௧. தரிகடம் : மும்மதம். சமரதந்தி : போர் யானை.

உ௯௩. மைக்கொடை : மாரி போன்ற வண்மை.

துட்டகுல காலனொரு சொற்கபடி லாதிருபன்
வட்டவுல காளுமதி லபரபலன் - கட்டளைசேர ௨௬௪

வள்ளல் இருபத் திரண்டாக மாநிலத்தோர்
எள்ளரிய சீமூதம் எட்டாகத் - தெள்ளுதரு ௨௬௫

ஆறுக்கச் சங்கத்தார் ஐம்பதின்மர் ஆக்கமதி
வீறுக்க வந்துதித்த வேல்வீரன் - பேரும்

அருணநெறி சேகரத்தான் அப்சுத ராய
வருணகுலா தித்த மகிபன் - கிரணமிகும்

காரமதித்த நற்கொடையான் காதலுட னோசகர
பாரமதித்த நாகைப் பசுங்காவில் - ஏரமதித்த ௨௬௮

---

௨௬௫. தலைஎழு வள்ளல், இடைஎழு வள்ளல், கடைஎழு வள்ளல் என முன்னர் மூவேழு இருபத்தொரு வள்ளல் இருந்தனர், இப்போது வருண குலாதித்தனைச் சேர்த்து இருபத்திருவர் ஆகிவிட்டனர். சீமூதம் ஏழை இவன் எட்டாக்கிவிட்டான். சீமூதம் : மேகம். தெள்ளுதரு : கேட்டது கொடுக்கும் தேவமரங்கள்.

௨௬௬. தேவதாரு, இதுவரை ஐந்தே இருந்தன. அவற்றை ஆறாக உயர்த்தி விட்டான் இந்நாகைப் பதியான். மதுரையிலே சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்த சிவபெருமான் உள்ளிட்ட நாற்பத்தொன்பது புலவர்கள் இப்போது ஐம்பது பேர் ஆகிவிட்டனர், இத்தென் நாகைக் கோமானையும் சேர்த்து.

௨௬௭. அருண நெறி : செம்மை வழி. கிரணம் : ஒளி.

௨௬௮. கார் : மேகம். நாகைப்பசுங்காவில் : நாகை நகரப் பசுமை மிக்க பூஞ்சோலையில்.

(வருண குலாதித்தனை இதோடு ஒருவாறு விட்டு, இனி முதலில் வர்ணிக்கப் பட்ட அந்தக் கட்டழகியிடம் போகவேண்டும். நாகைப் பசுங்காவில்தான் அந்த மோகினியை அவன் கண்டது. அவள் வயப்பட்டு அழியும் அவன் பரிதாப நிலையைப் பார்க்கலாம்.)

**காட்சி**

பொன்போல் மரகதம்போல் பூமயில்போல் வானுலவு
மின்போல் தரள விளக்குப்போல் - என்போலவர் ௨௯௯

ஆருயிர்போல் தெய்வ அரம்பைபோல் ஆவிகொளும்
சூரியன் மாதா சுவடுபோல் - கூரியன்ன

கண்போல் கவுஸ்துவம்போல் காகோ தரநாட்டின்
பெண்போல் ஒளிரும்பர வாளம்போல் - நண்போதும்

சித்ரமுயிர் பெற்ற செயல்போல்வி சித்திரம்போல்
அத்ரமதன் செங்கோல் அரசுபோல் - முத்திறமாய்த்

தோய்ந்த தமிழின் சுவைபோல் அரனவிழியால்
சாய்ந்த அரசு தழைக்கவே - ஆய்ந்துவரும்

ஏந்திழைபோல் முக்கனிபோல் இன்னமுது போல்மதுரம்
சாய்ந்து நறுங்குழற்கிழத் தள்ளாடி - ஏந்தும்

இரண்டு குடம்போலும் இருதனங்கள் தாங்கி
மருங்கு துவண்டு வருந்த - நெருங்கிவந்து

நிற்பாரைக் கண்டு நெடிதுயிர்த்துத் தெய்வமே
இப்பாரில் வந்தஇவர் யாரென்று - பொற்பாமென்ன ௩0௬

---

௨௯௯. மரகதம் : பச்சை. தரளம் : முத்து.

௩00. தெய்வ அரம்பை : தெய்வப் பெண். கூரிய : கூர்மையான.

௩0௧. கவுஸ்துவம் : திருமால் அணியும் ஒரு மணி. காகோதரநாடு : நாகர் வாழ் லோகம். அந்நாட்டுப் பெண் : நாக கன்னிகை.

௩0௨. அத்ரம் : அஸ்திரம். முத்திறம் : இயல் இசை நாடகம் என்னும் மூன்று வகை.

௩0௩. அரன விழி : சிவனின் நெற்றிக் கண்.

௩0௫. மருங்கு : இடுப்பு.

௩0௬. நிற்பாரை : நிற்கின்ற அம்மங்கையரை. நெடிதுயிர்த்து : பெருமூச்சுவிட்டு.

நெஞ்சம் கலங்கி நினைவழியும் வேளையினில்
கஞ்ச மலரடியும் கண்ணிணையும் - தஞ்சமென **௩0௭**
அஞ்சல் புரிய அதுவே வரமாக
வஞ்சம் அறமகிழ்ந்து வாய்திறந்து - விஞ்சலுற்றும்

**காதற்பேச்சு**

தேனே மதன் திரவியமே செங்கமல
மானே அநுராக வல்லியே - கானுற்றும்
கொந்தளக பந்தி குலைந்தாடக் குன்றினிமிர்
சந்தளவு பாரத் தனமாட - உந்தினுழும்
வள்ளை இரு தண்டின் மகரக் குழையாடப்
புள்ளணைய வேற்கண் புரண்டாட - மெள்ள
மருங்குலொசிந் தாட மணிவடங்கள் ஆட
அருங்கமல மாமுகம்வேர் வாடப் - பெருங்கழங்கோடு
அம்மனைபந் தாடி அடியேன் மருண்டாட
இம்மனையில் ஆடும் இயல்இருக்கத் - தொம்மென்று **௩௧௩**

---

௩0௭. தஞ்சம் என : அடைக்கலம் என்று.

௩0௮. அஞ்சல் புரிய : அபயங் கொடுப்ப. விஞ்சல் உற்றும் : மேம்பாடு உற்று.

௩0௯. அநுராகம் : ஆசை. கான் : மணம்.

௩௧0. கொந்தளகபந்தி : கொத்தான கூந்தல் வரிசை. குன்றின் நிமிர் : மலையைப்போல நிமிர்ந்திருக்கின்ற. சந்து அளவு : சந்தனம் அப்பிய. பார : பெரிய.

௩௧௧. வள்ளை : காதுக்கு உபமானமான ஒரு இலை. குழை : காதணி. புள் : வண்டு.

௩௧௨. வேர்வாட : வியர்வை அரும்ப. கழங்கு : பந்துபோன்ற விளையாடும் கருவி.

௩௧௩. அம்மனை : அதுவும் கழங்கு போன்ற விளையாடும் கருவியே. மருண்டாட : மயங்கி ஆட. 'தொம்' ஒலிக் குறிப்பு.

வட்டத்தில் பாடி மணிஊசல் ஆடுவீர
இட்டத்தி லேஇருக்க எண்ணீரோ - துட்டமதன

அம்பும் உமதுவிழி அம்பும் மிகப்பொருதால்
நம்புமடி யேற்கேது நன்றுதலே - கொம்பில ௨௧௪

குயிலால் நெடிது கொதிக்கும்திக் கோடை
வெயிலால் வெதும்பி விடவோ - புயலார

உமது குழற் காவணத்தின் உற்ற நிழற்கீழ்
அமையும் இடந்தந் தருளீர் - எமைமருவிக்

கொங்கையா னைக்கோட்டால் குத்தாமல் சித்தசனார்
வெங்கையா னைக்கிடுதல் மேம்பாடோ - திங்கள் முகம்

காட்டிலீர் நாளும்அது கண்டேன் மயல்பூட்டி
வாட்டினீர் என்னை மறம்செய்தீர் - காட்டுக்கு

எறித்தநில வாக்கினீர் என்வசனம் மாயக்
குறைத்தமரம் ஆனேன் கொடியேன் - மறித்தோர் ௨௨௦

அருள்வசனம் கூறுவதும் அத்திப்பூ ஆமோ
மருள்வசனம் யான்மொழிதல் மாண்போ - பொருளோ ௨௨௧

---

௨௧௫. அடியேற்கேது : எனக்கு வாழ்வு ஏது. கொம்பு : மரக்கிளை.

௨௧௬. புயல் : மேகம்.

௨௧௭. குழற் காவணம் : கூந்தலாகிய கொட்டகை.

௨௧௮. கொங்கை யானைக் கோடு : கொங்கையாகிய யானைத் தந்தம். சித்தசனார் : மன்மதனார். அவன் கையிலுள்ள யானையாவது, யானைக்கு வேழம் என்று ஒரு சொல் உண்டு. வேழம் என்றால் கரும்பு என்பது பொருள். கரும்பு மதன வில்.

௨௧௯. மறம் செய்தீர் : மறக்கருணை செய்தீர்.

௨௨௦. மாயக் குறைத்த மரம் : பட்டுப்போக வெட்டிய மரம். மறித்து ; தடுத்து. ஓர் : ஒரே ஒரு.

௨௨௧. அருள்வசனம் : கருணைப் பேச்சு. அத்திப்பூ, அபூர்வமாகவே பூக்கும். அத்தி பூத்தாப்போல என்பது பழமொழி.

மொழியீர் மொழிந்தால் முத்துதிரு மோகறபு
அழியீா அதனுல அணஙகே - செழியீா ௩௨௨
மதனஉபதே சமபணணி வாழவிபபீா எனறன
விதனமெலலாம மாறி விவேகம - முதலாப
பணிவாருக காசைநெடும பாமபுவிஷங கொண்டால்
மணிவாய மருநதுதவ மாட்டீரோ - தணியாத
வலஇருமபும கல்லும வயிரமதெவவொன றுக்கிளகும
புலஇருந்து வீதி புறபபடினும - வலலமையால் ௩௨௫
எபபடிசொன னலும இளகாது உமதுமனம
மைபபடியும கூந்தல் மடந்தையீா - இபபடியில்
உமநெஞசம எனநெஞசாய உறறு நடுநடுங்கும
எனநெஞசம உமநெஞசாய் எயதாதோ - முனனம
உடுக்கை இழந்தவன கைபோல ஆஙகே
இடுககண களைவதாம நடபெனறு - எடுத்ததிரு
வளளுவனா சொனனகுறள வாராதோ வந்தாககால்
எளளளவும நெஞசம இரஙகாதோ - களளமதன
செஙகோலும ஆக்கினையும செல்லுமோ நீமுனைந்தால
பைஙகோ கனகமஉறு பாவையே - இஙகேதான ௩௩௦

---

௩௨௨. செழியீா : செழுமையானவரே!

௩௨௩. விதனம : வருத்தம.

௩௨௪. ஆசைப பாமபின் நஞசு தலைககேறிவிட்டது. மணிவாய் மருந்து - செஙகனிவாய இதழ அமுதம தர மாட்டீரா?

௩௨௭. உஙகள மனம என் மனம் ஆகி என் மனம உஙகள மனம ஆகக்கூடாதா?

௩௨௮. உடுககை : ஆடை. இடுக்கண் : துன்பம்.

௩௩௦. ஆக்கினை : ஆணை. கோகனகம : தாமரை. அதில் இருக்கும் பாவை இலக்குமி.

தாதத்வம் சொன்னேனைத் தாங்கவோ நீர்நினையீர்
ஈதல் தவிர்ந்தநிலை யென்பீரோ - சீதளித்து ௩௫௧

வாசமிலாக் காரும் வண்மைவிளர்த்த தேய்பிறையும்
பூசலிலதேல் குனியாப் பொற்சிலையும் - ஆசளவும்

தைத்துப் பிளக்கறியாத் தண்ணளியி லாவேலும்
வைத்த பயத்தினூறு வளையும் - மொய்த்தநறை

கூடியமென் சிற்றிளங்கால் கொண்டறிகி லாக்குமிழும்
ஆடை அமுதுதவா ஆம்பலும் - வாடிக்
குவிந்தலரும் தாமரையும் கோடுமுகச் சங்கும்
அவிந்துவளை வெய்தும் அமையும் - சிவந்தகுறி ௩௫௫

காட்ட அறியாத காந்தளும் குங்குமச்சேறு
ஆட்டப் புளகித்து அறியாத - கோட்டானைக் ௩௫௬

---

௩௫௧. தாதத்வம் : அடிமை நிலை. சீதளித்து : குளிர்ந்து.

௩௫௨. வாசமிலாக் கார் : மணமில்லாத மேகம். வண்ணம் விளர்த்த தேய் பிறை : நிறம் வெளுத்துத் தேய்கின்ற சந்திரன். பூசல் இலதேல் குனியாப் பொற்சிலை : போர் இல்லையானால் வளையாத அழகிய வில். ஆசு அளவும் : அடிப்படை வரையும்.

௩௫௩. வேல் : வேலாயுதம். பயம் : நீர். வளை : ஓர் கொடி. நறை : தேன்.

௩௫௪. மென் சிற்றிளங்கால் : மென்மையான இளம் தென்றல் காற்று. ஆடை அமுது : ஆடைப்பால். ஆம்பல் : செவ் ஆம்பல் பூ.

௩௫௫. கோடுமுகச் சங்கு : வளைந்த முகத்தைக் கொண்ட சங்கம். அமை : மூங்கில்.

௩௫௬. காந்தள் : காந்தட்பூ. புளகித்தறியாத : மயிர்க்கூச்செய்தி அறியாத.

கோடும் ஒரு வழியில் கூடாக் கரும்பாம்பும்
பாடுகரு தாதவட பத்திரமும் - ஆடவர்கள் ருருஎ
தக்கமனம் வேருகித் தாஞ்சுழல வேநிலையாய்
நிற்க அறியாத நீர்ச்சுழியும் - விறகோன்
நிலைப்பாடு மேவாத நேரிழையும் முன்பு
செல்பார் கரையுடைய தேரும் - குலைக்குறிய
வாழையுங் காணு வளையில் வீழ் ஞெண்டுந்
தாழும் வராலும் சரிகுறையில் - வீழும் ருசo
தராசுமடி பட்டுத் தளர்பந்தும் செம்மை
இராதவியற் கூர்மத் தெழிலும் - பராமரித்தே
பத்து மதியும் பலவடுவாய்க் காயாமல்
மத்தியத்தில் வந்துதவும் மாந்தளிரும் - மொய்த்துமலர்
நீண்டகுழல் நெற்றி நெறிப்புருவம் கண்காது
காண்டகைய நாசிவாய் கந்தரமே தோள் - பூண்டகரம் ருசங

---

ருருஎ. கோடு : தந்தம். கரும்பாம்பு : கரிய நாகம்; இது வயிற்று மயிர் ஒழுங்குக்கு உபமானம். பாடு : பெருமை. வடபத்திரம் : ஆலிலை.

ருருஅ. நீர்ச்சுழி : நீர்ச் சுழற்சி; இது கொப்பூழுக்கு உவமை.

ருருகூ. நேரிழை : நேரான நூல்; இது இடைக்கு உவமானப் பொருள். குலை : தாறு. குறிய : சிறிய.

ருசo. வாழை, துடைக்கு ஒப்பு. ஞெண்டு: நண்டு. சரிகுறையில் : சமம் குறைந்தால். வீழும் : தாழும்.

ருசக. தராசு பரட்டுக்கும், பந்து குதிக்கும், ஆமை புறங்காலுக்கும் உவமானங்கள். கூர்மம் : ஆமை.

ருசஉ. பத்து மதி, பத்து விரல்களுக்காக. மாந் தளிர் உள்ளங்காலுக்கு.

ருசங. குழல் : கூந்தல். நெறி : அடர்ந்த. நாசி : மூக்கு. கந்தரம் : கழுத்து.

கொங்கைகளோ ரோமம் குளிர உதரம் உந்தி இடை
தங்கு நிதம்பம் பக்கவான் தண்முழந்தாள் - துங்கக் ௫௪௪
கணைக்கால் பரடு குதிக்கால் புறந்தாள் இன்பம்
கணிக்கும் அளவுமில் உள்ளங்கால் கட்கே - இணக்கிப்
பெரியோர்கள் எல்லாரும் பேசும் அருள்போல
சரியோத என்றும் தருமோ - அரிவையே
ஓடாத மானே உரையாத செம்பொன்னே
வாடாத பூவே மரகதமே - தேடக்
கிடையாத பஞ்சவர்ணக் கிளியே கோது
படையாத புல்லகண்ட பாகே - நடைஆடும்
சித்திரமே காமன் திரவியமே மோகநறச
முத்திரமே கட்டாணி முத்தமே - அத்திரவேள்
ஆகமமே வாழ்வே அரசே அதிமதுர
போகமே யான்செய்த புண்ணியமே - மோகினியே ௫௫௦
கண்ணே விரக்க கருவிளமே அமுதப்
பெண்ணே கலவிப்பிர தாபமே - ஒண்ணுதலே
கேகயமே என்றென்று கீர்த்திப்பேன் வாழ்அநு
ராகதியார் கம்தந்தால் ஆகாதோ - வேகமதன ௫௫௨

---

௫௪௪. உதரம்: வயிறு. உந்தி: கொப்பூழ். நிதம்பம்: குறி. கவான்: துடை.

௫௪௫. இணக்கி: பொருத்தி.

௫௪௬. தருமோ: தந்தியாகுமோ; தகாது என்பது கருத்து. அரிவை: பெண்.

௫௪௮. கிளை: கிளி. கோது: குற்றம். புல்ல கண்டம்: வெல்லம்.

௫௫௧. கருவிளம்: கருவிளங்கனி.

௫௫௨. கேகயம்: மயில். கீர்த்திப்பேன்: புகழ் பாடுவேன். அநுராகம்: ஆசை.

காவிக் கண்ணையும் கரும்புவில்லும் நீதந்தால்
சேவித் துவகையாய்ச் சேரேனோ - பூவுலகில் ௩௫௩
சொன்மருவு நின்கொங்கைத் தூக்கத்தில் என்னை
[வைத்தால்
மன்மதனார் கொல்லவசம் ஆவேனோ - பொன்மயில்போல்
நின்றமா னேநீ நிலமேலே நின்றபதம்
கன்றினால் என்னாவி கன்றாதோ - ஒன்றியரை
மாத்திரை இன்பம் மகிழ்ந்தெனக்குப் பாலித்தென்
கோத்திரமெல் லாமடிமை கொண்டருளீர் - பூத்திகழும்
தேனே பிறக்கும் ஜென்மமெல்லாம் யானடிமை
தானென்ன மேல்திருக்கண் சாத்துவீர் - மானனையீர்
காத்தானை மார்பிற் கமலா சனத்திருவைச்
சேர்த்த வருணகுலா தித்தனைச் சென்று - ஏத்தி
மகராஜன் என்றுரைக்க மாட்டாதார் செல்வம்
நிகராமோ வாலிபத்தின் நேர்தாம் - இகலாகி
மோனமே பண்ணி முனிந்திருந்தால் வீணிலே
போனநாள் மீண்டுவரப் போகுதோ - தேனனையீர் ௩௬௰
மாகோபம் உண்டேல்என் மார்மீதும் தோள்மீதும்
ஓகோதாள் கொண்டுதைக்க ஒண்ணாதோ - கோகிலமே

---

௩௫௪. தூக்கம் : காவலமைந்த அரண்.

௩௫௫. கன்றினால் : வருந்தினால். ஒன்றி : பொருந்தி அரை : ஒன்றில் பாதி.

௩௫௭. பாலித்து : அருள்செய்து.

௩௫௮. கமலாசனத் திரு : தாமரைத் தையல்.

௩௫௯. நாகைக்கோனைப் புகழாதார் செல்வம் விரைவில் அழிந்துவிடும்; அதற்குக்கூட ஈடாகாது வாலிபப் பருவம். அதனினும் விரைந்து இளமை போய்விடும்.

௩௬௧. மாகோபம் : பெருஞ்சினம். தாள் : கால். கோகிலம் : குயில்.

மஙகை ஆணை வைத்தாலும வையுமஇனி உமமாணை
என்ஆணை கோபமெனாக இல்லையே - மினனானையீர ௩௬௨
நற்றிககண் ணேறுகொண்ட நறகனிவாய ஊறலிலே
சற்றுதொட்டுததெறித்தால் தாழ்வாமோ - பொற
சேரா பவளத் திருவாய மலாநதொருசொல் [ றொடியீா
தாரிரஎன் தனனைத் தனிபாரா - வாரீரெனறு
உளளம இளகி உருகுகினற எனஅுளவில
எளளளவும நெஞசம இரஙகாமல - மெளளவே ௩௬௫
இத்தனைநே ரந்தனியே யானுரைககும விணணபபம
அததனையும கேட்டுஙகே ளாதவர்போல - கொத்துமலர்
பூட்டுசிலை மாரன பொரகிறகி ருனனெனறு
காட்டுதல்போல் சறறே கடைககணிதது - கேட்டுமிக
வின்முறுவல் செயது விளையாடித தம்மிலே
புனமுறுவல் செயதருளிப போயினா - மனமதனும

**போனபின் தடுமாற்றம்**

வெஙகாதல பூணும வெகுரா ஜதநடையும
சிஙகாரப பினனழகும சேவித்தேன - மஙகைநல்லார்
மண்ணிலே தோயஅடி வைததசுவடு அததனையும
கண்ணிலே ஒற்றிஒறறிக காமுறறேனன - ஒண்ணு
[ தலாள ௩௭௦

---

௩௬௩. நறறி : நத்தி. **கண்**ணேறுகொண்ட என மீது பாலொடு தேன கலநத நறகனிவாய ஊறலில் கொஞசம தொட்டுத் தெறிததால ஒனறும குறைவந்து விடாது.

௩௬௭. கடைக கணித்து : கடைக கண்ணால் பார்தது.

௩௬௮. வின் முறுவல் : ஒளிச் சிரிபபு.

௩௬௯. வெங்காதல் : விருபபக் காதல். வெகு ராஜத நடை. நேர்த்தியான ராஜநடை. சேவித்தேன். வணங்கினேன்.

௩௭௦. தோய : படிய. சுவடு : அடையாளம்.

நின்ற நிலையும் நெறித்தபுரு வக்கடையும்
மன்றல்அளகம்செறிந்த மாலையும்-பொன்ற எனைப் ௩௭௧

பார்த்தபார் வைக்குள் பாய்பாயும் பசுந்தேனில்
போர்த்தபோர் வைக்கடங்காப் பூண்முலையும்-சாத்தவரை

வாட்டுகின்ற செந்தா மரைமுகமும் கஸ்தூரிக்
கோட்டு நுதலிற் குறுவேர்வும் - தோட்டுமலர்ப்

பூங்காவில் வந்த புதுமையுமென் கண்ணைவிட்டு
நீங்காமல் உள்ளறிவு நீங்கினேன் - ஓங்குதுயர்

கொண்டேன் வினையேன் கொடிஇடமாய் வந்தபலன்
கண்டேன் இதயம் கலங்கினேன் - அண்டிஎதிர் ௩௭௫

காணத் தவம்செய்த கண்போல்மற் றைம்பொறியும்
பேணத் தவம்செய்யப் பெற்றிலேன் - நாண்அழுகு

குன்றினேன் ஆண்மை குலைந்தேன் துணைஇழந்த
அன்றில்போல் வாடினேன் அவ்வளவில் - ஒன்றியாப்

பித்தன்இவன் என்றெனைக்கோர் பேருண்டே ஆதலினால்
நித்தனிவன் என்று நினைவுற்று - சித்தசன்தான் ௩௭௮

---

௩௭௧. மன்றல் : மணம். அளகம் : கூந்தல். பொன்ற : உருக்குலைய.

௩௭௨. பூண் : ஆபரணம்.

௩௭௩. கஸ்தூரிக் கோட்டு நுதல் : கஸ்தூரியைக் கோடாகப் போடப்பட்ட நெற்றி. குறு வேர்வு : சிறு வியர்வை. தோடு : இதழ்.

௩௭௫. கொடி : காக்கை. அது இடமாக வருதல் நல்ல சகுனமல்ல என்பார்கள்.

௩௭௬. காணக் கண்கள் செய்த தவத்தை மற்றைப் பொறிகள் செய்யவில்லை. நாண் : நாணம்.

௩௭௭. அன்றில் : ஆணும் பெண்ணும் இணைபிரியாமல் வாழும் பறவை இனம்.

௩௭௮. சித்தன் - சிவபெருமான்.

தண்டா நுதல்விழியாள் தான்பட்ட கண்கலக்கம்
உண்டான எல்லாம் உளத்தெண்ணித் - தெண்டிரைசூழ்

துங்க உலகில் சுரும்பையெல்லாம் நாணாக்கிச்
செங்கரும்பை யெல்லாம் சிலையாக்கி - வெங்கலக ௩அ௦

மாகவனத் தோடே வளரும் அசோகமெலாம்
சோகவன மாகத் துணர்பறித்துச் - சேகரித்து

முல்லையெனும் பேரின் முழுங்கிரையும் பூமியும்விட்டு
எல்லையிற் பூ எல்லாம் எடுத்தேந்தித் - தொல்அயனுக்கு

உந்திக் கமலமலர் ஒன்றளித்துச் செந்திருவை
வந்திக்கு நாகையர்கோன் மார்பிருத்தி - சந்திக்கும்

கோகனகம் உள்ளெலாம் கொய்திரதி கண்போலவே
ஆகுமலர் மாவின் அலர்பறித்து - வாகையிற்போர்

ஆடிவிஜ யம்புனைய அம்பாக்கித் தான்அநந்த
கோடியுரு ரூபம் கொண்டெய்தி - நீடுலகில் ௩அரு

ஒப்புருப் பாவி உடலந் தனைத் தனக்கோர்
அப்பருத் தூணிகளாக்கினான் - மெய்ப்படவே ௩அசு

௩எசு. தண்டா: குறையாத. நுதல் விழி: நெற்றிக் கண். தெள் திரை: தெளிந்த கடல்.

௩அ௦: சுரும்பு: வண்டு. நாண்: விற் கயிறு. சிலை: வில்.

௩அக. துணர்: பூச்கொத்து.

௩அஉ. தொல் அயன்: பழைய பிரமன்.

௩அ௩. வந்திக்கும்: வணங்கத்தக்க. இருத்தி: இருக்கச் செய்து.

௩அச. கோகனகம்: தாமரை. இரதி: மன்மதன் காதலி. மாவின் அலர்: மாம்பூ. வாகை: வெற்றி.

௩அரு. அனந்த கோடி ரூபம்: பல கோடி வடிவம்.

௩அசு. ஒப்பு உருப் பாவி. ஈடில்லாத பாவி. உடலந்தனை: என் உடம்பினை. அப்பு அருத் தூணி: அம்புகள் நீங்காத கூடு.

நொந்தேன் பரதவித்தேன் நோககினகா மாககினியால்
வெந்தேனஉள ஆவி வெதுமபினேன-நைநதேன - ௧௮௭

விழுந்தேன் அயர்ந்தேன மெலிநதேன நினைவும
அழிநதேன பரவசமே ஆனேன - செழுஙகபட

**கனவிற் காணுதல்**

நெஞசிற கருணையில்லா நிஷடுரி யார்தமமை
வஞசக கனவில் வரககண்டேன - செஞசிலமபு

கொண்டஇரு தாளமலரைக கும்பிடடேன வெயயோனைக
கண்டகம லமபோல் களிகூரந்தேன-தெணதிரைசூழ

நீதியுல கந்தனிலே நிட்சேபங கண்டெடுத்த
ஆதுலாபோல் பேருவகை ஆயினேன - தீதில்நெறி

சேருமவருணகுலா தித்தனையே சேர்ந்துகளி
கூருமஅவாபோல குறைவறறேன - ஆரத்தின

வணடல்அணி கொஙகைகளை வாழத்தினேன மஙகை
[ நல்லார்
கெண்டை இணைவிழியைக கீர்த்தித்தேன்-அணமையிலே

சென்றேன பராமுகமோ தேவரீர் விண்ணபபம
ஒன்றேற அதுகேடக ஒண்ணுதோ - இனறுமைநான ௧௯௪

---

௧௮௭. காமாககினி : ஆசை நெருபபு.

௧௮௮. பரவசம ஆதல் : தன வசம இழந்து பிறர வழி ஆதல.

௧௮௯. நிஷடூரியார : கொடுமையானவர்.

௧௯௦. வெயயோன : ஆதவன.

௧௯௧. நிட்சேபம : புதையல். ஆதுலர : வறுமையாளர். உவகை : களிபபு.

௧௯௨. ஆரம : சநதனம.

௧௯௩. வணடல : குழமபு. கெணடை : மீன வகை. இணை : இரணடு. அணமை : சமீபம.

௧௯௪. விண்ணபபம ஒனறே : வேணடுகோள ஒன்றுதான. ஒண்ணுதோ : கூடாதோ.

சற்றே ஒருவார்த்தை சம்பாஷித்துக்கொள்ளப்
பற்றேனோ சொல்லீர் பனிமொழியீர் - பொற்ற
[ொடியீர் ௩௯௫
எந்நேரமுமேநீர் ஏவினது கேட்டுமது
பின்னே திரிந்து பிழையேனோ - என்னுடைய
மேதகைய நெஞ்சின் விழிவேல் விளைத்துவரும்
காதல் நிறைக்கும் களஞ்சியமே - சூதுபயில்
சேல்இலங்கு கண்மடவீர் செப்பீர் திறந்தேஓர்
கால்எளிமை வேண்டாவோ காரிகையீர் - ஏலமலர்
ஏரிலங்கு பூங்குழலீர் என்அருமை என்பெருமை
ஆரறிவார் நீரறிவ தல்லாமல் - நீரைத்
தெளித்தாலும் ஆருயிர்ச் செழுங்காமச் செந்தீ
அளித்தால் வல்லக்காரம் ஆமோ - களிக்கும்
தவலோகர் கரும்பங்கும் தாம நகையீர்
துவலோ துவலொன்றும் சொல்லீர் - நவமாம் ௪௦௧

---

௩௯௫. பனிமொழி : குளிர்ந்த பேச்சு. பொற்றொடி : தங்க வளையல்.

௩௯௭. நெஞ்சின் : நெஞ்சிலே. விழி வேல் : கண்ணாகிய வேலாயுதம்.

௩௯௮. சேல் : மீன். திறந்து : வாய் திறந்து. ஓர் கால் : ஒரு முறை. ஏலம் : வாசனை.

௩௯௯. ஏர் : அழகு.

௪௦௦. வல்லக்காரம் : வெற்றி.

௪௦௧. தவலோகர் : தவ உலகில் வாழ்வார். தாமம் : ஒளி. துவலோ துவல் : சாதலோ சாதல், நான் சாக வேண்டியதுதானோ? "காதல் போயிற் சாதல்" நவம் : புதுமை.

விழிபாய வேனொந்தேன மெல்லிநல்லீர் உந்திச்
சுழிபாயவேன என்று துதி சொனனேன - தழுவும் ௪௦௨
பொருவாள விழியாரப போதுமுகம பாரத்தத
திருவாய மலர்ந்துநகை செயதார : பெரிதிஙகு

**கனவில் அனுபவித்தல்**

இதுவே தருணமென எணணிடடம தேடி
மதுவேறு பூஙகா வனததில் - உதவியதோர
வாளை மணிவசநத மணடபததிற பூஙகமுகினை
பாளை மணஙகமழும பநதரிட்டு - நீள ௪௦௫
எடுதது வகையான எலலேயிலா மாலை
தொடுத்துச சிலபூச சொரிந்து - விடுத்ததிலே
பாயல் படுத்துப பரிமளபபூ மெத்தையின்மேல
ஆய விரித்ததனமேல் ஆஙகவரை - சேயபதம
கனறுமல கொணடேறிக கைகட்டி வாயபுதைதது
நினறேன இருதாளை நீட்டினா - சென்றந்தக
கால்கொணடு பறறிஇரு கையாரத தீண்டிஅணை
மேல்கொண்டு நானுமஙகு மேவினேன - மாலகொண்ட

௪௦௨. பொரு : போர்வலல. அபபோது : அத்தருணம.

௪௦௪ மது ஏறு : தேனபெருகும.

௪௦௫. வாளை மணி வசந்த மணடபம : வாளை மீன துளளும நீர்நிலை சூழ்ந்த அழகிய இளவேனில மாளிகை. கமுகு : பாக்கு. பநதர : காவணம.

௪௦௭. பாயல படுத்து : படுககை செயது. ஆய: காமபரிநத மலர். சேயபதம : சிவந்த திருவடி.

௪௦௮. கன்றுமல் : சுவடுபடாமல். இருதாளை : கால்கள் இரணடையும.

௪௦௯. அணை : படுககை. மால் : மயககம.

மைக்குழலை நீவி வகிர்ந்து வகிர்ந்ததிலே
தக்கமது மாலையெலாம் சாத்தினேன் - மிக்கபனி ௪கo
நீரில் குழைத்த நிறக்குங் குமக்குழம்பைப்
பூரித்த கொங்கைகளிற் பூசினேன் - வேரிமலர்
இற்பூவை அன்றனாக்கு இதவியகாய்ச் சுணையுடன்
கற்பூர தாம்பூலம் கைகொடுத்தேன் - அற்புதமாம்
பாதிச் சுருளாளாக்குப் பாலித்து அமிர்தநிலை
சோதிக்க லீலை தொடங்கினார் - சீதமலர்
மட்டிலே தோய்குழலார் மாமே கலைநெகிழ்ந்த
மட்டிலே என்னை மறந்தேனயான் - கட்டிமலர்க்
கைக்குளணைத் துக்கரணக் கட்டளைவட டத்துறையுள்
புக்கொருமித் தெட்டுவகைப் புட்குரலிட்டு - ஒக்கவெடுத்து
அப்புறமுற் றிப்புறமுற் றற்புவிளைத் துப்பரிவைச்
செப்பிநகத் திறகுறியைச் சிக்கெனவைத்து-ஒப்பிலெழில்
பற்குறியிட் டுக்கருணைப் பத்மமுகப் பொற்பொளிரப்
பொற்குவடொத் துப்புணரப் புத்தமிர்தத் - திற்குலவிச

---

௪கo. மைக்குழலை : இருண்ட கூந்தலை. நீவி : தடவி. வகிர்ந்து : வகுப்பெடுத்து. மதுமாலை : தேன் ஒழுகும் ஆரம்.

௪கக. பூரித்த : பருத்த. வேரி : தேன்.

௪கஉ. இல்பூவை : வீடாகக்கொண்ட மங்கை. இதவிய : நலமான. காயச்சுணை : காசுக்கட்டி.

௪கரு. பாதிச் சுருள் : கொடுத்ததிலே பாதி வெற்றிலைச் சுருள். பாலித்து : கொடுத்து.

௪கச. மட்டு : தேன். மாமேகலை : மகிமை வாய்ந்த ஆடை. மட்டிலே. அளவிலே.

௪கரு. புட்குரல். : பறவை ஒலி.

௪கசு. அற்பு : அன்பு.

௪கஎ. பத்மம : தாமரை. பொற்குவடு : பொன் மலை.

சற்றிளகிச் சற்றிறுகிச் சகரதலந் துகள இலக
கற்றுமதார்த்து ஒத்தத்தாக காசவிழப் - பொற்பு ௪௧௮
மிருத்த முலைக்கண் விரல்கொண்டு அதுக்கி
நகத்தின உறுத்தி நகைத்து - முகத்தை
முகத்தில் அழுத்தி முயக்கி மயக்கி
மிருத்த நலத்தை விளைத்து - சுகத்தில் ௪௨௦
அரத்த நிகர் அதரத்தை எயிற்றில்
இருத்தி அருத்தி இசைத்துக் - கழுத்தில் இசை
உற்ற கரணத்தில் ஒரு வகை கொருவர் ஒத்துவகை
பெற்றதில் அடிக்கடி பிணக்குவர் - நற்றுயிலில்
மைத்திலக நெற்றிபுரு வக்கடை நெறிப்புவர
உயத்திடுக பூதொடுகை உடப்புகுத - மெத்திய
கொந்தள பந்தி குலைந்து சரிந்திட
வந்து சுரும்பர் வஞ்செய - முந்திய
செஞ்சர ணங்கள் சிலம்பு புலம்பிட
வஞ்சி மருங்குல் வளைந்திட - அஞ்சொலுடன் ௪௨௫
நெஞ்சமும் ஒன்றி நிரம்பிய சங்கை
கொஞ்ச இரண்டுகை கும்பிட - விஞ்சிய ௪௨௬

---

௪௧௮. கச்சு : ரவிக்கை.

௪௨௧. அரத்தம் நிகர் அதரம்: ரத்தம்போல் சிவந்த உதடு. எயிறு : பல். அருத்தி : உண்ணச் செய்து.

௪௨௨. கரணம் : கலவி. பிணக்கு : ஊடல்.

௪௨௩. மைத் திலகம் கருப்புப் பொட்டு.

௪௨௪. கொந்தள பந்தி : பூங்கொத்தணிந்த கூந்தல் வரிசை. சுரும்பு அரவம் செய : வண்டு ஒலியிட.

௪௨௫. சரணங்கள் : அடிகள். சிலம்பு : நூபுரம். மருங்குல் : இடுப்பு.

ஆவியொன்ற ஆகமொன்ற ஆசையொன்ற நேசமொன்ற
மேவுபஞ்ச பாணதுங்கன் வீறடங்க - வாவுமினப ௨௨௭

மேலணிந்த பூண்மழுங்க மேனிசிவங்கும் வேர்வரும்ப
நீலமணாறல் வீசுமுந்தி நீர்ததும்பக் - கோலமிகும்

மொய்அகலம் மேலிட்ட முத்து வடஞ்சிதறத்
தூய்யதிரு மேனி துவட்சிதர - மெய்யுறநான்

ஆரமதன் நூலில் அறிந்தறியாச் சந்தேகம்
சேர அடைவே தெளிவித்துக் - காரிகையார் ௨௩௦

தந்த அநுராக சம்போகம் கொண்டாடி
இந்த்ரபதம் பெற்றவர்போல் இன்புற்றுச் - சிந்தை

தனைவென்று வாடகண் தருங்களவைக் காம
வினையென் றறியேன் விழித்தேன் - நனைகமழும்

**கண் விழித்தபின் புலம்பல்**

சோலையெல்லாம் தேடியுனைச் சுற்றியுனைக் காணமல்
மாலையெல்லாம் கொண்டு வருந்தியுனை - பாலனையாய்

அப்போது சென்றஅடி அல்லாமல் பார்த்தனவில்லை
இப்போது சென்றஅடி யாங்காணேன் - மெய்ப்படநான்

---

௨௨௭. ஆவி : உயிர். ஆகம் : உடல். ஒன்ற : ஒரு சேர. பஞ்சபாண துங்கன் : ஐந்தம்பு மதன். வீறு : பெருமை.

௨௨௯. மொய் : வண்டு மலருக்காக மொய்க்கின்ற. அகலம் : மார்பு.

௨௩௦. ஆர : நிறைய. அடைவே : முறையாக.

௨௩௧. அநுராக சம்போகம் : ஆசைப் புணர்ச்சி. இந்த்ர பதம் : தேவேந்திர பதவி.

௨௩௨. நனை : தேன்.

காணவே முந்திக் கனவென்று அறிந்தக்கால்
வீணிலே ஓடி விழிப்பேனோ - பேணி ௪௩௫

அறிவுக்கு இனியார் அகலாமல் கையால்
இறுக்கத் தழுவி இரேனோ - நறுநுதலார்
நேரமுதக் கொங்கையினைச் செவ்வாயி னூறலுறி
ஆரமுதம் உண்டுபோராக் காகேனோ - காரிகையார்

ஏயத் தனியே எழுந்தருள இன்னுமந்த
மாயத் துயிலெனக்கு வாராதோ - நேயமுடன்

மெய்ந்தெளிவே நீங்கி விழித்ததுவும் பேசுவதும்
இத்தனையு மோகனமென் றேயறியேன் - சத்தியமே

என்று வருந்தி எரியும் கனல்வாயில்
ஒன்றும் மெழுகாய உருகினேன் - மன்றலணி ௪௪௦

பாயலிலே சற்றே பரிசித்த மாத்திரத்தில்
ஆயிரநாள் கூடினர்போல் ஆயினேன் - சேயிழையார்

அன்பும் பெருநலனும் அந்தரங்க மும்பெருக
இன்பம் பெரிதாய் இருந்ததுவும் - துன்பம்
அனைத்தும் தவிர்ப்பவர்போல் ஆட்கொண் டதுவும்
நினைத்துநெடு மூச்செறிந்து நின்றேனே - வினைக்கலகக்

கோபமத் தாலே குறையுயிரும் கொள்ளைகொள்ளும்
சாபமத் தாலே தயங்கினேனே - சோபனத்

தொந்த மதியால் தொடர்ந்துபோ தாக்குறைக்கு
வந்தமதி காய மதியழிந்தேன் - சந்ததமும் ௪௪௫

---

௪௩௭. பராக் ஆதல்: ஜாக்கிரதையாக இருத்தல்.

௪௪௦. கனல்: நெருப்பு. ஒன்றும் மெழுகாய்: பொருந்திய மெழுகு போல.

௪௪௪. சாபம்: வில்.

௪௪௫. தொந்தம்: தொடர்பு. மதி: மதிக்கத் தக்க இனிமை. மதி: சந்திரன். மதி: புத்தி.

அண்டர் குறைத்தமரம் ஆனேனே அடலவேழம்
உண்ட விளங்கனிபோல் உள்ளுடைந்தேனே - அனைவரும்
திவாடை யாலே தியங்கினேனே பாமடந்தை
மாவாடை யாலே மயங்கினேனே - காவில்
செழுந்தென்றல் ஊடாடச் செந்நீடலைவக
கொழுந்தென்றலாலே குறைந்தேனே - தொழுந்தகைய
காளகண்ட வாளவிழியார் கட்டுரைகேளாச் செவியில
காளகண்ட ஓசையுங்கேட்கக் கன்றினேனே - மேளமிகும்
தந்திமருப் பென்னும் தடமுலையார் காரளக
பந்திமஞ்சு காணப் பயந்தேனே - முந்தி அருள் ௨௫௦
தாவிய பொழிலுறச் சந்த்ரோதயங்காண
வாவிக் குமுத மலரானேனே - பாவியேன்
புண்ணான நெஞ்சுருகப் பொங்காரம் விட்டாற்றக்
கண்ணில் ஒருவரையுங் காணேனே - எண்ணில்
விரகாதி மோக விளைவாங் கடலின்
கரையேறு கின்றவழி காணேனே - உருகிமனம் ௨௫௩.

---

௨௪௬. அண்டர்: பகைவர். குறைத்த: வெட்டிய. வேழம்: விளாம்பழத்தைப் பற்றும் ஒரு நோய். அப் பிணி பெற்ற விளங்கனி வெறுங் கூடாக இருக்கும்.

௨௪௯. காள கண்ட வாளவிழியார்: நஞ்சைத் தொண்டையிலே பெற்ற வாள் போன்ற கண்ணார். காளகண்டம்: குயில். கன்றினேன்: துயருழந்தேன். மேளம்: உணவு.

௨௫௦. தந்தி: யானை. மருப்பு: தந்தம். கார் அளக பந்தி: கரிய கூந்தல் நிரை.

௨௫௧. வாவி: தடாகம். குமுதம்: சந்திரனைக் கண்டு மலரும் மலர்.

௨௫௨. பொங்காரம்: பெருந் துக்கம். எண் இல்: கணக்கில்லாத.

பேராசை கொண்டேன் பிழைக்கும் பொருட்டாகச்
சோராது ஒருநினைவு தோன்றிற்று - நேராக ௨௫௪

**மடல் ஊர நினைதல்**

காமம் உழந்து கலங்கி வருந்தினர்க்கு
ஏமம் மடலல்லது இல்லைவலி - ஆமென்றே ௨௫௫
சொன்ன திருவள்ளுவரைத் தோத்திரஞ்செய்தேன்
(கருத்தில்
உன்னிமடல் ஊர்தற்கு ஒருமித்தேன் - வன்னநறுந்
தாதளவும் செய்ய இதழ்த் தாமரைப்பூங் கண்ணுறைக்
காதளவும் தாவும்போர்க் கண்ணுறை - சீதமுலைச்
சூதாரை எல்லையற்ற சூதாரை வள்ளைஎனும்
காதாரைச் சற்றுமிரங் காதாரை - போதகம்
செய்யாரை மிக்கமறஞ் செய்தாரைக் காந்தளெனும்
கையாரை என்னளவிற் கைத்தாரை - வெய்யமயல்
தந்தாரைப் பூங்குழலின் தாராரை மாலளிக்க
வந்தாரைக் கொங்கையின்மேல் வாராரை-சிந்தைவெறும்

---

௨௫௫. "காமம் உழந்து வருந்தினார்க் கேமம், மடலல்லது இல்லை வலி" என்பது குறள். காமத்தினால் தாக்கப்பட்டுத் துன்பம் எய்தினார்க்கு மடலூர்தல் தவிர வேறு வலி இல்லை.

௨௫௬. ஒருமித்தேன்: தீர்மானித்தேன்.

௨௫௭. தாது: மகரந்தப் பொடி.

௨௫௮. சூது. சூதாடுகாய். சூது: வஞ்சனை. போதகம்: போத அகம், வரமனம்.

௨௫௯. மிக்க மறம்: பெருங்கொடுமை. கைத்தார்: கசந்தார். வெய்ய மயல்: கடும் மயக்கம்.

௨௬௦. தாரார்: மாலையை அணிந்தவர். மால் அளிக்க: மயக்கம் தர. வாரார்: ரவிக்கை அணிந்தவர். வெறும்: ஒன்றுமற்ற.

கல்லாரை மனமதநூல் கறருரை மையபுருவ
வில்லாரை ஏழுலகும விறபாரை - நல்லபட சகூக

மடற்கோலம்

தன்னிலவர் வனநெஞசம தாநெழிய மஙகைநல்லார
என னும படிவம எடுததெழுதிப - பினனர்

சடைகட்டி வெண்ணீறு சாததிநறும பூளைத
தொடைகட்டி வெளளெருககுச சூடி - உடல்கருக

நெஞ்சதிர அன்றெரித்த நித்தனிவன எனறுமலரப
பஞசசர வேளும பயபபடவே - விஞசமுதச

செமபவள வாயார திருவேளைக காரனென
அமபொன்நெடுங காகளஙகள ஆரபபவே-குமபமுனி

சொறறகைமை மால்விளககும தொல்காபபியந்
[தெளிந்தே
உறறபெரி யோரநாறபத் தொனபதினமா - நறறமிழநூல்

சேரும வருணகுலா திததன செழுங்கனகத்
தாருவெனும கோனை தருமனஅருள் - பேரறஞசேர்

---

சகூக. கல்லார் : கல்லைப போனற கடினமானவர். ஏழுலகும விறபாரை : எலலா உலகஙகளையும விறறுக் கொளளத தகக எழில் பெறறுரை.

சகூஉ. பூளைத தொடை : இலவமபஞசு மாலை. வெள எருககு : வெளளை எருககம பூ.

சகூந. அனறு எரித்த நித்தன: அந்நாள் எரித்துச் சாமபலாக்கிய சிவன. மலாபபஞச சர வேள : ஐந்து பூங கணை மாரன. பயபபட : நடுநடுஙக. விஞசு : மேமபட்ட.

சகூரு. வேளைககாரன : காலக கடவுள. காகளங்கள- வெற்றிச் சினனஙகள. ஆரபப : சபதிகக. குமப முனி : அகததியன.

சகூசு. சொல தகைமை மால விளககும தொல் காப்பியம : சொல்லாகிய தகுதியில்உளள மயக்கத்தை விளககிச் சொனன தொல்காபபிய நூல். நாறபத் தொன்பதின்மர் : சங்கப புலவர்கள.

சகூஎ. செழும கனகத்தாரு: செழுமையான தஙகமரம்.

ஆத்தான போஜன அனங்கவே ளைத்துறந்தோன
நாத்தான இரணடுரையா நாகரிகன - காததான் ௪௯௮

அருணமலா மாதுபுணா அசசுத ராய
வருணகுலா திததன மகிழத - தருணமயல

தீாவென பலாகாணத தெனநாகை வீதியிறசெனறு
ஊாவென பனைமா உகநது. ௪௭0

வருண குலாதிததன மடல் முற்றும.

---

௪௯௮. ஆததான போஜன் : ராஜசபைககு ஏறற வன. அனங்கவேளைத துறந்தோன : காமனை வெனற வன. நாததான இரணடு உரையா நாகரிகன : இரண்டு பேசசு அவனிடம இலலை. அவன நா மாறாது; அவ வளவு நாகரிகமானவன. யாா? காத்தான் தான.

௪௯௯. அருணமலா மாது : செந்தாமரை வாழ திரு. புணா : அவள சோகதை பெறற அசசுதராயனுகிய வருண குலாதித்தன. தருண மயல் : சமயத்தில பெறற மயல.

௪௭0. தீாவென : தீாகினறேன. பலர் காண: பலரும அறியுமபடி. தென நாகை வீதியில செனறு: தென பாலுள்ள நாகை நகர் தெருவிலே போய. ஊர்வேன்: செலுத்துவேன. பனைமா: பனங்கருககால ஆய குதிரையை. உகந்து: மகிழசசியோடு.